25th January 1961]

*Examinations*

* 195 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to make suitable changes in the present system of examinations in view of the recommendations made in the report on the present system of examinations drawn up by the Committee of Educationists at the instance of the University Grants Commission; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI: ஸார், இந்தக் கமிட்டியானது, வருஷக் கடைசியில் பரீட்சை வைத்து கொடுக்கப்படும் தேர்வு முறைக்குப் பதிலாக, ஒரு மாணவர் வருஷ முழுதும் எடுக்கும் மார்க்குகளை வைத்து தேர்வு முறை இருக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: என்னிடம் இருக்கும் தகவல்படி, அந்தக் கமிட்டி ரிபோர்ட்டை இன்னும் முடிவு செய்ய வில்லை என்று தெரிகிறது. அங்கத்தினர் எப்படி அவர்கள் சிபாரிசைக் கண்டு பிடித்தார் என்று சொல்ல முடியவில்லை.

SRI N. K. PALANISAMI: எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் இந்த வருஷம் 52 சத விகிதம் பெயில்யூர் ஆக இருக்கிறது. கிட்டத் தட்டச் சில கேஸ்களில் ஒரு மார்க்கு, இரண்டு மார்க்கு குறைவுக்காக பல மாணவர்கள் பெயில் ஆகியிருக்கிறார்கள். அம்மாதிரி கேஸ்களுக்கு இரண்டாவது ஸிஸ்டு கொடுக்க உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: மூலக் கேள்வி யுனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் பற்றியது. இப்பொழுது அங்கத்தினர் கேட்கும் கேள்விக்கும் அதற்கும் சம்மந்தம் இல்லை.

*History of Tamil Nad*

* 196 *Q.*—SRI M. P. SARATHI: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ் நாட்டின் சரிதத்தை சரியாக ஆராய்ந்து தயாரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளதா?

(இ) அப்படியாயின், விவரமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI S. M. ANNAMALAI: இப்பொழுது இருக்கிற சரித்திர வரலாற்றில், வீர பாண்டிய கட்டபொம்மன் போன்ற வீரர்களின்

[25th January 1961]

வரலாறுகள் இருக்கவில்லை. ஆகவே, அம்மாதிரி வரலாறுகளைச் சேர்த்து சரித்திரப் புத்தகங்களை வெளியிட சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்டோர் ஆராய்ச்சி செய்து அம்மாதிரி எழுதலாம். அதில் சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டிய அவசியம் இல்லை. சர்வ கலாசாலைகளும் நடவடிக்கை எடுக்கலாம்.

SRI K. SATTANATHA KARAYALAR : May I know whether this Government was contacted by the Central Government in compiling the National Register of Historical Documents and Monuments?

THE HON. SRI C. SUBRAMANIAM : I am sorry I do not have that information with me just now.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், அப்படி திருத்திச் சரித்திரம் எழுதப்பட்டால், சுதந்திரத்திற்கு சம்மதமாகவும் எழுதி, சுதந்திரத்திற்கு சாதகமாக யார் யார் இருந்தவர்கள், பாதகமாக இருந்தவர்கள் யார் யார் என்று மக்கள் புரிந்துகொள்ள சரித்திரம் நிலைநாட்டப் படுமா ? (சிரிப்பு.)

THE HON. SRI C. SUBRAMANIAM : எழுதுவதாகச் சொல்லவில்லை.

*Co-operative Milk Supply Union (Salem)*

* 197 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சேலம் கூட்டுறவுப் பால் விநியோகச் சங்கம் பாலில் கலப்படம் செய்ததாக வந்த புகாரின் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : A case was filed in the Court of the Additional Magistrate No. 2, Salem. The Magistrate imposed a fine of Rs. 1,000 on the Society. The President was let off with admonition and the Secretary and the vendor were acquitted.

SRI A. VEDARATHNAM : இன்னும் பல சங்கங்களிலே இம்மாதிரிப் பாலில் தண்ணீர் கலந்து வியாபாரம் செய்கிறார்கள்; ரெயில்வே ஸ்டேஷன்களில் இருக்கும் பாலெல்லாம் தண்ணீராக இருக்கிறது. அவற்றைக் கண்டுபிடித்து, தக்க நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கூடுமானவரையில், இவைகளைச் செக் பண்ணி, ப்ரிசீலனை செய்து, எங்கெங்கே தண்ணீர் கலந்து அகப்படுகிறார்களோ, அங்கங்கே ப்ராஸிக்யூஷன் செய்கிறோம்.